# தமிழுலகைத்தொடர்.

---

## முதற் சுவடி.

---

## தொல்காப்பியவாராய்ச்சி.

---

திருவாளர் பா. வே. மாணிக்கம் நாயக்கர்,
மு. இராகவையங்காரவர்களிடை நிகழ்ந்த

## எழுத்துப் போக்குவரவு.



ஜெகப் அண்டு கம்பெனியாரது டைட்டான் அச்சுக்கூடம்,
திரிசிரபுரம்.

1024

# தமிழுலகைத்தொடர்.

## முதற் சுவடி.

# தொல்காப்பியவாராய்ச்சி.

# அறிவுரை.

---

'தமிழுலகைத்தொடர்' என்னும் சொற்றொடர், வேற்றுமைத் தொகையாயும், அல்வழித் தொடராயும் நின்று பல்வேறு பொருள்களைக் குறிப்பதாயினும், அவ் வெல்லாப் பொருள்களுக்கும் ஏற்ப இத்தொடரின் உட்கிடை இருப்பது அறிஞர்க்கடைவே புலப்பாடுறுமென்ப துண்மையின், சங்கப் பெயர் வரலாறு கூறிற்றிலம்.

இம்முதற் சுவடியில், திருவாளர் பா. வே. மாணிக்கம் நாயக்கர், மு. இராகவையயங்காரவர்களிடை நிகழ்ந்த எழுத்துப் போக்குவரவு வரையில் வெளியிட்டுள்ளோம்.

இரண்டாவது சுவடியில், தொல்காப்பிய வாராய்ச்சிக்குத் தருமுறை ஒன்றே யுளதென்பதும், அஃதீதென்பதும், வெளிவரும்.

இப்படிக்குத்,

# தொல்காப்பிய வாராய்ச்சி.

## முதற் கடிதம்.

திருவாளர் பா. வே. மாணிக்கம் நாயக்கர்,
மு. இராகவையங்காரவர்களிடை நிகழ்ந்த
எழுத்துப் போக்கு வரவு.

I

Berhampore,
20—8—23.

அன்புள்ள ஐயா,

நான் தங்களை நேரே கண்டறிந்திலேனாயினும் என்னைப் போன்ற தமிழ்ப்பற்றுடையோன் தாளிற்கு விடையளிக்கும் அன்புடையீரென வுணர்ந்து இது வரையலாயினேன்.

கொள்ளலாகுமெனும் ஓர் ஆறுதல் தோற்றிற்று. தாங்கள் அன்புகூர்ந்து பின்வரும் ஐய வினாக்களுக்கு விடையளிப்பீர்களானால் மிகவும் நன்றி யறிதலுடையவனாவேன். தாங்கள் எனக்காக மிகுபொழுது செலவிடாதபடி, சுருக்கமானவிடைகளுக்கேற்ற ஐயப்பாடுகளையே குறிக்கின்றேன்.

முன்பின்னறியா யான் கொடுக்கும் தொந்திரவிற்கு மன்னிப்பு வேண்டுகின்றேன்.

1. தொல்காப்பியன் என்னும் பெயரான் செய்ததால், நூல் தொல்காப்பியம் என்னும் பெயர் பெற்றதென்பதற்காவது,

தொல்காப்பியம் என்னும் நூலைச் செய்தமையால் அவ்வாக்கியோன் தொல்காப்பியன் என்னும் பெயர் பெற்றான் என்பதற்காவது,

உரையாசிரியர்கள் முதலாகப் பின் வந்தோர் கூற்றுக்

களையன்றி, நூலின்கண் சூத்திரங்களிலேயே அறியக் கிடப்பதேதேனும் உண்டாயின் அவைகளின் குறிப்பு.

2. தொல்காப்பியம் என்னும் நூற் பெயரில் உள்ள காப்பியம் என்னும் சொல் காவியம் என்னும் வடசொல்லின் திரிபு என்பதற்கு உரையாளர் கூற்றன்றி நூலின் உட்புறத்தே ஏதேனும் களின் குறிப்பு.

மேற்கோளுண்டாயின் அவை

3. '|காப்பியம் = காவியம்; கவியாகிய சுக்கிரனது வழி சம் என்பது பொருள் '|. நூலில் இதற்குச் சான்றேதேனும் உண்டாயின் அதன் குறிப்பு.

4. தொல்காப்பிய முனிவரின் இயற்பெயர் திரணதூமாக்கினி என்பதற்கும், அவர் சமதக்கினியின் புதல்வ

ரென்பதற்கும், உரையாளர்கள் கூற்றன்றி, தொல்காப்பிய நூலிலாவது அதற்கு முற்பட்டதாகச் சொல்லப்படும் இலக்கண இலக்கியத் தனுக்குகளிலேனும் சான்றுண்டாயின் அதன் குறிப்பு.

5. நிலந்தருதிருவிற் பாண்டியன் காலம் இடைச்சங்க காலம் என்பதற்கு உரையாளர்கள்

கூற்றன்றி வேறுசான்
றாண்டாயின் அதன் குறிப்பு.

6. பாயிரச் செய்யுள், ஒருசாலை மாணாக்கராய பனம் பாரனார் கூறின தென்பதற்கு உரையாளர் கூற்றன்றி வேறுசான்று.

7. அகத்திணை, புறத்திணை, அகப்பொருள், புறப் பொருள் என்பன குறிக்கும் பொருள் உரையாளர் கூற் றின்றி ஆசிரியர் கூற்றில் உள்ள சூத்திரங்கள்.

8. “ஒழுங்கற்ற மணமுறைகளை நீக்கி ஒத்த அன்பு பற்றிய காதலுறவத்தையும், அதன்பின்னர்க் கற்பியலையும் ஆரியமேலோர் தமிழ்நாட்டார்க்கு நன்குணர்த்திப் போந் தனர்” என்பதை உரையாளர் கூற்றின்றி நூலின்நேராக உணர்த்தற்குரிய சூத்திரங்கள்.

9. உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டிய மேற்கோள்களுள், தொல்காப்பிய காலத்திற்குமுந்திய இலக்கியங் களுளவாயின் அவை.

10. ‘சாதி’ என்கிற சொல், நூலின்

'சீர்வாழ்சாதி' என்பதுபோல் விலக்கிலக்கணக் குறித்ததுபோக மக்களினங் கணக் குறிக்கிற இடங்களெனவெ வென்பதும், நாங்கள் சாதி என்னும் சொல்லை மக்கள் வகுப்பினரைச் சார்த்தி வழங்குவதற்கு தொல்காப்பியத்தில் ஏதேனும் பற்றுக்கோடின்றாவென்பதும்.

11. "மேலோர் மூவர்க்கும்" என்ற சூத்திரத்தைச் சுட்டி, "கற்புமுறை ஆரிய வருணத்தார் மூவர்க்குமே

4

இருடிகளால் ஆதியில் நியமிக்கப்பட்டதென்றும், அவ் விதிகளைத் தங்கள் புராதன முறையொன்றில் நின்றொழுகி வந்த தமிழர் முதலியோர்க்கும், பிற்காலத்தே அவர்கள் விதித்துப்போந்தனரென்றும் ஆசிரியரே கூறுகின்றார்" என்றது புலப்படவில்லை.

மேலோர்மூவர்-ஆரிய வருணத்தார் என்பதும், அவர்கள் தமிழரல்லரென்பதும், உரையாளர்கள் உள்ளப்போக்கின்படி அவ்வாறு உய்த்துணர்ந்ததையன்றி, சூத்திரங்களில் நேராக மேலோர்

மூவர் ஆரிய வருணத்தாரென்று

கூறியதுண்டெனின் அவைகளின் குறிப்பு.

12. மேலோர் மூவர் தமிழர்களல்லராயின் அவர்கள் வழங்கிய மொழிதான் யாதென்பது.

13. தமிழகத்து வண்புகழ் மூவராகிய சேர சோழ பாண்டியர்கள் ஆரியவருணத்தவர்களா அல்லது தமிழர்களா என்பது.

14. களவொழுக்கமின்றியே தனிக்கற்புமுறை முன்பு வழங்கியதில்லை யென்பது "முற்படப்புணராத சொல்லின் மையிற்-கற்பெனப்படுவது களவின் வழித்தே" என்னும் களவியற் சூத்திரத்தைக்கொண்டு புலப்படுத்தியிருக்கின்றது. இப்பொருளைத்தரும் தொல்காப்பிய சூத்திரங்களுளவேல் அவைகளின் குறிப்பு.

15. தமிழ் மக்களாகக் கருதப்பட்டார் இவ்வைந்து நிலத்தவரே யென்பது நாம் நன்குக உய்த்துணரக்கூடிய தென்றும், நம்பியார் கருத்தும், ஆயர், வேட்டுவர், கிழார், பரதவர், மறவர், என்ற ஐவகை மக்களுமே தமிழ் நாட்டிற் குரியர் என்பதும் குறித்திருக்கின்றது. இக்கருத்தை இன்னும் சிறிது

விரித்தல் வேண்டும். அதாவது :—

a. இவ்வைவகை மக்கள் தமிழ் நாட்டில் தொன்று தொட்டிருந்து வந்தவர்களா? அல்லது தொல்காப்பியத்

தில் கூறப்படுவதாகக்கொண்ட 3 ஆரிய வருணத்தார் தமிழ் நாட்டிற்றொன்று தொட்டிருந்து வந்தவர்களா? வென்பது.

b. இம்மூன்று ஆரிய வருணத்தார் பின் வந்து தமிழ் நாட்டிற் குடிபுகுந்தோராயின், அவர்களே பெரும்பாலும் அகத்திணையில் தலைவர்களாகக் காணப்படுதலின், தமிழ் மக்கள் முறையென்று களவியலை இவ்வாரிய வருணத்தார் மூவர்களும் கைக்கொண்டொழுகினரா வென்பது.

c. பார்ப்பான், பாங்கன் முதலிய

அறுவான்றி களவொழுக்கத்தில் வேறொருவரும் பேசுதற்குரியவாராக விதிக்கப்பட்டில ரென்றும், வாயிலாக நின்று பேசுதற்குரியார், தோழி, தாய், பார்ப்பான், பாங்கன் முதலாயினோர் என்றும், நால்வகையான களவுக்கூட்டத்தில், பாங்கற்கூட்டமொன்றென்றும், பாங்கனிமித்தங்கள் பன்னிரண்டென்றும், பாங்கனும் பார்ப்பார் இனத்தவனென்றும் கூறியிருத்தலின், களவியலிற் கூற்று நிகழ்த்தவும், சந்து செல்லவும் இன்றியமையா இப்பார்ப்பார் ஆரிய வருணத்தாராயின், இவர்கள் தமிழ் நாட்டிற் குடிபுகாமுன் தமிழ் மக்களுடைய களவியல்தான் என்னையென்பது.

16. "இவற்றுள் ஓதற்பிரிவு சூத்திரவொழிந்த ஏனை வருணத்தார்க்கு உரித்தென்றும்,

பகைமேற்பிரிவும்
காவற்பிரிவும் அரசர்க்கே உரிய எனவும், (27–28)'' என்று விளக்கிப் போந்ததில், தொல்காப்பியத்துள் வழங்கும் அந்தணர் அரசர் வணிகர் என்கின்ற சொற்களோடுடன் கொண்டு " சூத்திர '' ரென்கிற சொல்லையும் வழங்கியிருப்
பதால் இச் 'சூத்திர' ரென்னும் சொல்லுக்குப் பொருள் தொல்காப்பியத்துள் வழங்கும் "வேளாளர்" என்பதா ? அத்தொல்காப்பியச்சொல் "வேளாளர்" என்பது, தமிழ் நாட்டிற்கே உரிய ஐவகை மக்களாகக்கொண்ட, ஆயர், வேட்டுவர், கிழார், பரதவர், மறவர் என்பாரை உட்படுத்



துகின்றதா? அவ்வாறு உட்படுத்தாவிடின், ஒரு பொருளவாகக்கொண்ட வேளாளர் சூத்திரர் என்னும் சொற்களுட்பட வேட்டுவர் முதலாயினோர், ஐந்து முதல் ஒன்பதின்மூன வருணத்தினர்களா ? வென்பது.

17. "உயர்ந்தோர்க்குரிய ஓத்தினான" என்பதிலுள்ள 'ஓத்து' என்னும் சொல் வடமொழிவேதம்
என்று
பொருள்படுகின்ற தென்பதற்கு, உரையாளர்

கூற்றான் றி | சூத்திரங்களுள் குறிப்பு.

தெளியச் செப்பியதன்றெனின் அதன்

18. "அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினும்" என்னுஞ் சூத்திரத்தை முன்னிட்டு, அடிமை வழக்கம் நாட்டிலிருந்தமை பெறப்படுமென்றும் 'அடியோர்' என்பது விற்றுக்கொள்ளற்குரிய அடிமைகளையே குறிப்பதாதல் வேண்டுமென்றும் கூறியுள்ளது. இக்கருத்து பண்டையுரையாசிரியர்களும் கொண்டதாகத் தோன்றவில்லை. இவ்வொரு சொல் 'அடியோர்' என்பதையன்றி, தொல்காப்பியச் சூத்திரங்களுள், விற்றுக்கொள்ளற்குரிய மக்களிருந்தனரென வுணர்த்துவன உண்டேல், அவைகளின் குறிப்பும், இன்னும் சங்க நூல்களினுண்டேல், அவைகளின் குறிப்பும்.

19. 'மறை' என்னும் தமிழ்ச் சொல்லையும்

"வேதம்"
என்னும் வட சொல்லையும், ஒரு பொருள் குறிப்பனவாக வழங்கி யிருக்கின்றது. "மறை" என்பது மறைப்பைக் குறிப்பதினாலேயும் "வேதம்" என்பது (Vidh-to know) புலப்பாட்டைக் குறிப்பதினாலும், ஒன்றற்கொன்று மொழி பெயர்ப்பாகா. "மறை" என்பது வடமொழி நூற்பெயரின் மொழிபெயர்ப்பாதலால் அவ்வடசொல் லாமென்பது.

20. தலைமகன் 16 ஆண்டினன்; தலை மகள் 12 ஆண்டினள் என்று உரையாளர்களாற் குறிப்பிட்டு இவ்வா



ராய்ச்சியிலும் எடுத்தாண்டு கொண்டதற்கு உரையாளர்
கூற்றன்றி, தொல்காப்பிய சூத்திரங்களில் எங்கேனும் புலப்படுகின்றதுண்டெனின் அதற்குக் குறிப்பு.

வேறு பின்வந்த அகப்பொருளிலக்கணங்களிலேனும்

புலப்படுமேல் அதற்குக் குறிப்பு.

21. களவியல் நீட்டம் இரண்டு திங்களென்பதற்குத் தொல்காப்பியச் சூத்திரங்களில் ஏதேனும் சான்றுண்டேல், அதன் குறிப்பு.

22. "மறை வெளிப்படுதலும் தமரிற்கோடலும்" என்பதிலுள்ள உம்மைகள், 'கொடுப்போ ரின்றியும் கரண முண்டே' என்னுஞ் சூத்திரத்திற்கேற்க, எண்ணும்மைகளாகப் பொருள் கோடல் என் பொருந்தாதென்பது.

23. 'இவளை நீ இன்னவாறு பாதுகாக்க,' எனத் தலைவனுக்கும், 'இவனுக்கு இன்னபடி குற்றேவல் செய்தொழுக' எனத் தலைவிக்கும், அங்கியங் கடவுள் அறிகரியாக மந்திரவகையால் வேள்வியாசான் கற்பிப்பதாகும். இதனைக் 'கரணம்' என்றுரைப்பர் தொல்காப்பியர்.—இவ் விவரங்கள் உரையாளர்கள் கூற்றினன்றி நேராகத் தொல்காப்பியச் சூத்திரங்களில் எங்குள்ளனவென்பது.

24. பார்ப்பார், அறிவர் என்பவர்களை வேறாக எண்ணப்பட்டிருத்தலின், அறிவர் ஆரிய வருணத்தினரா? அவ்வாறானால் பார்ப்பாருக்கும் அறிவர்க்கும் வேற்றுமை

யென்ன? அறிவர் தமிழ் மக்களாயின், 'மேலோர்' என்பது ஆரிய மக்களைக் குறிக்கின்றதென்பதனால், 'அறிவர்' என்போர் மேற்கூறிய அறிவர்களாவென்பது.

25. 'கரணத்தினமைந்து முடிந்தகாலை'

என்னும் சூத்

திரத்தின்கீழ் உரையாசிரியர்களைத் தழுவி, முதல் மூன்று நாள் தலைவியைச் சோமன் முதலிய மூவர் முறையே புணர

விட்டு, நாலாம் நாள் தலைவன் புணரும் ஒழுக்காறு வடநூல்

ப

களினின்று காட்டப் பட்டுள்ளதற்கு, உரையாளர் உய்த்துணர்ந்ததை யன்றி, வெளிப்படையாகத் தொல்காப்பிய சூத்திரங்களுளவேல் அவற்றின் குறிப்பு.

26. "மறைந்த ஒழுக்கத் தோரையுநாளும், துறந்த ஒழுக்கம் கிழவோற்கில்லை" என்னும் சூத்திரத்தை வைத்து உய்த்துணர்ந்ததன்றி, களவொழுக்கத்தில், பூப்பொடு புணர்தலுக்கு வேறு நேரான சான்று மூலத்தில் உண்டெனின், அதன் குறிப்பு. அல்லது பிற்பட்ட இலக்கியமேனும் உண்டெனின் அதன் குறிப்பு.

27. "அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான, வந்த குற்றம் வழிகெட ஒழுகலும்" என்பதினின்று "பிராயச் சித்தம் செய்யும் வழக்கொன்று" உய்த்துணரப் பெற்றதை யன்றி, பிராயச்சித்தத்தை நேராகப் பேசும் சூத்திரங்கள் தொல்காப்பியத்திலுளவாயின் அவைகளின் குறிப்பு.

28. "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் . . . ." என்னும் சூத்திரத்துள், அறுவகை, ஐவகை, இருமூன்று என எண்களைச் சொல்லியிருக்கின்றதேயன்றி, அவை இவை யென விளக்கியிருக்கவில்லை. பாயிரத்துள்ளும் அவை இவை யெனப் புலப்படவில்லை. உரையாசிரியர்கள் காட்டிய மேற்கோள்கள், தமிழுக்குப் புறம்பான ஆரிய வேதத்தினின்றும் தொல்காப்பியத்திற்குப் பிற்பட்ட இலக்கியங்களினின்றும் இருக்கின்றன. சில எண்களுக்கு உரையாளர்கள் ஆரிய வேதத்துட் குறித்த எண்களுக்கு வேறுபாடு கண்டு, கூட்டியும் குறைத்தும் சரி செய்து காட்டுகின்றனர். தொல்காப்பியத்திலேயே இவ்வெண்கள் எவ்வெவ்வற்றைச் சுட்டுகின்றனவென்றறியச் சூத்திரங்களுண்டேல் அவைகளின் குறிப்பு.

29. அணைநிலைவகையைப் பற்றிச் சொல்லுமிடத்து, வருண சாங்கரிகத்தால் வந்த கலப்புச்சாதியாரெனக்

9

குறிப்பிட்டிருக்கிறது. கலப்புச் சாதிகளைப்பற்றி மநு சொல்வது உண்மையே. அவைகளைப்பற்றி தொல்காப் பியத்துள்ளேயே உரையாளர் உய்த்துணர்ந்தவாறன்றி நேராக அறியக்கிடக்கும் சூத்திரங்களுண்டேல் அவை களின் குறிப்பு.

30. " மெய்ப்பாடாவது, உலகத்தாரது உள்ளத்தே நிக ழும் நிகழ்ச்சிகள் ; ஆங்கு நிகழ்ந்தவாறு புறத்தார்க்கும் புலப்படுவதோர் வழியா ல் வெளிப்படுவதாம்" என்று விளக்கியுள்ளது.

தமிழ் கூறு நல்லுலகத்து வழக்கும் செய்யுளும் கொண்டு நாடி எழுதிய பொருட்டால், தமிழ்நாட்டவர் வழக்கே தொல்காப்பியம் சொல்லுகின்றதெனப் பல்வே றிடங்களிற் குறிப்பித்து வந்து, மெய்ப்பாட்டியலை விளக் குங்கால் மாத்திரம் உலகத்தாரது மெய்ப்பாட்டைப் பேசு வதாகக் கொள்ளல் எவ்வாறு பொருந்தும் என்பது. இத் தொல்காப்பிய மெய்ப்பாடும், தமிழ் நாட்டார் மெய்ப் பாடேயன்றி, பிறநாட்டார்க் குரியனவல்லவெனின் தவ றென்னை என்பது.

31. மரபியலைப் பற்றிப் பேசுவதில், சொல்லதிகாரக் கிளவியாக்கத்து மரபென்று வரையறுத்தனவும், செய்யு ளியலில் மரபென்று ஓதப்பட்டனவும், மரபியலென வேறாக வைத்ததையுமே குறிப்பிட்டிருக்கின்றது. எழுத் ததிகாரத்து, "நூன்மரபு" "தொகை மரபு" என்னும் மரபு எப்பொருட்டன வென விளங்காதவற்று ளொன்றா கலின், இந் நூன்மரபு, தொகைமரபுகளின் மரபு எத்த கைய தென்பது.

இப்படிக்கு தங்களன்பிற்குரிய,

இஃது (Sd.) P. V. Manickam. திருவாளர் பண்டிதர் மு. இராகவையங்கார் அவர்களுக்கு.

## II

திருவல்லிக்கேணி,
4, பேயாழ்வார்கோயில் வீதி,
3—9—1923.

தாங்கள் விடுத்த 'ரிஜிஸ்டர்டு' கடிதம் கிடைக்கப் பெற்றேன். அதனுள், தொல்காப்பியப் பொருளதிகாரத்துக்கு எழுதப்பட்ட பழைய உரைக் கருத்துக்களைப்பற்றியும், அவற்றைப்பெரிதுந் தழுவியமைந்த என் கருத்துக்களைப்பற்றியுந் தங்கட்கு நிகழ்ந்தனவாகக் குறித்த 'ஐய'த் தொடரைப்படித்து வரலானேன். படித்து வந்தபொழுது, அவ்'ஐயங்' களிற் பெரும்பாலவுந் தக்க அடிப்படைபற்றி எழுந்தனவா? என்று பலமுறை ஆராய்ந்தும் எனக்குப் புலப்படவில்லை. அதனால் சில கருத்துக்களைப்பற்றித் தங்களிடம் உசாவிக்கொள்வது இன்றியமையாததாகின்றது. கீழே யான் எழுதியுள்ள கேள்விகளைத் தாங்கள் ஆராய்ந்தெழுதுவீர்களென்று நம்புகிறேன். அவ்வாராய்ச்சியினின்றும், தங்கள் கேள்விகள் பலவற்றுக்கு விடைபெறப்படக்கூடும் என்றும் எதிர்பார்க்கிறேன். அக்கேள்விகள் வருமாறு:—

1. தொல்காப்பியப் பொருளதிகார மூலத்தை உரை
யுடன் பன்முறை படித்து அதன் உள்ளீடுகள் இன்ன
வென்று தாங்கள் நன்கறிந்துகொண்டவர்கள்—என்பதைத்
தங்கள் கடிதம் தெளிவாக்குகின்றது. அங்ஙனமாகவும்,
தங்கள் கடிதங்களில் முக்காற்பகுதிக்கு மேல்—உரை
யுளன்றித் தொல்காப்பிய மூலத்துள் நேரான ஆதாரம்
உண்டா ?—என்ற கருத்துப்பட நெடுகக் கேட்கப்பட்டிருப்
பதன் நோக்கம் என்ன ?

2. நாற்குப்புறமாக ஆக்கியோன் பெயர் முதலியவற்
றைக் கூறுதற்குரிய பாயிரச்செய்திகள்
யாவும்நூ லுள்ளுங்

கூறப்படுதல் இன்றியமையாது என்னும் நியதியுண்டா? நூலுள்ளன்றிப் பாயிரத்துமட்டுங் காணப்படுமாயின் அச் செய்திகள் விலக்கத்தக்கனவா? (1–6 கேள்விகள்.)

3. சூத்திரவுருவில் அமைந்த இலக்கண நூல்களெல்லாம், எடுத்துக்கூறும் பொருள்களை உரைநடைபோல விரித்து விளக்கவேண்டும் என்னும் விதி உண்டா? (23, 24, 28) அந்நூல்கட்கு வரலாற்றுமுறையாலும் உத்திவகையாலும் முன்னோர் எழுதிப்போந்த உரைகளையும், வழிநூல்களையும் அடியோடு ஒதுக்கி நோக்கவேண்டிய ஆவசியகமென்ன? பன்னூற்றாண்டுகளாக அடிப்பட்டு வருந் தமிழறிஞருள், அவற்றை அங்ஙனம் விலக்கினவர் யாவர்?

4. சொற்கூறு பொருட்கூறுகளைப்பற்றிய கருத்து வேறுபாடுகள் முன்னோர்க்குள் உண்டேனும், நான்கு வேதம், வருணபேதம் போன்ற பொது அம்சங்களில் அவர்க்குள் அபிப்பிராய பேதம் இருந்ததுண்டா? உண்டாயின் பிரமாணம் யாது? (17, 19, 28).

5. பண்டைச் சொற்பொருண் மரபுகளையும் தமிழர் வழக்க வொழுக்கங்களையும் மனக்கருத்துக்களையும் வெளியிடக்கூடியனவும் இக்காலத்து வழங்குவனவுமாகத் தாங்கள் கருதும் பழைய தமிழ் நூல்கள் யாவை? பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்குப் போன்ற சங்கச் செய்யுள்களும், திவாகர முதலிய பழைய நிகண்டுகளும் அவற்றிற் சேர்ந்தனவா? வேறா?

6. தொல்காப்பியத்துக்கு முற்பட்ட பிரமாணமே தாங்கள் பெரிதும் விரும்புவதாகத் தெரிகிறது. அங்ஙனமே முற்பட்ட நூல்களில் முழு வுருவத்துடன் இப்போது வழங்கும் நூல் யாது? அதன் பழமைக்குச் சான்று என்ன? (14)

12

7. ஆரியச்சொற்பொருள் வழக்குக்களை ஒரு சிறிதுந் தழுவி யேற்றுக்கொள்ளாத பழைய தமிழ் நூல்கள் யாவை? தொல்காப்பியம் அவ்வாரிய வழக்குக்களை அடியோடும் விலக்கிய நூல்களுள் ஒன்றா?

8. வடமொழியில் ஒரு காலம்பற்றி வழங்கும் பொருளை தமிழில் வேறொரு காலம்பற்றி வழங்கல்

கூடாது என்னும் விதியுண்டா? (17, 19).

9. ஒரு வகுப்பினராய மக்கள் பிறிதோர் வகுப்பினர் நாட்டிற் குடியேறியவிடத்து, அவ் விருவருடைய வழக்குகளும் நடை யுடை பாவனைகளும் அவர்களுக் குட் கலந்து பரிமாறுவதும், காலாந்தரத்தில் தம் பூர்வ பாவனையை ஒரு சாரார் கைவிடுவதும் நேர்க்கூடியனவா? அல்லவா? அங்ஙனங் கலந்தவிடத்து அவ் விருசார் மக்களையும் ஓரினத்தவராகக் கொள்வதே முறையாமா? (15, 16, 17).

10. (a). சங்கத்துச் சான்றோரினும் பிற சான்றோரினும், வேதங்களும் அதன் அங்கங்களும் தமிழுக்கு முற்றும் புறம்பானவை யென்றும், அவற்றைத் தமிழிற் தழுவிக்கொள்வது இழுக்கென்றும் கருதின தமிழ் மக்களுண்டா? (28) (b). நான்கு வேதமல்லாமலின் நான்மறை வேறியாவை? இக்கூற்றிற்குப் பண்டை மேற்கோள்கள் உண்டா? அவை கூறும் பொருள் யாவை?

இங்ஙனம்,

தங்கள் அன்புள்ள, (Sd.) மு. இராகவையங்கார்.

13

III

Trichinopoly, 14-9—1923.

உ

திருவருள் துணை.

அன்புமிக்க அண்ணல்,

நலம், அவணும் அஃதே பல்குக.

திருவாளர் மு இராகவையங்காரது பொருளதிகார ஆராய்ச்சியினின்றும் தாங்கள் பல வினாக்களை யெழுப்பி அன்னார்க்கு விடுவித்ததன் படி, கைவரப்பெற்றுப் படித்து மகிழ்ந்தேன். என் சிறிய ஆற்றலில் பலசெயல்களை ஒருங்கு செய்ய ஒண்ணாமையின் காலந்தாழ்த்து இஃது எழுத நேர்ந்தது. தொல்காப்பியத்தில், அதிலும் பொருட்பகுதி யில் எனக்கும் பல ஐயங்கள்

தோன்றிக்கொண்டிருக்கின்றன. இன்னம் பன்முறை படித்தே ஒருவாறு தெளிவு ஏற்படவேண்டும். ஐயங்காரவர்களது ஆராய்ச்சியும் இப்பொழுது என் கையினீங்கியுளது. தங்கள் வினாக்களும் எளிதில் விடையிறுக்கக்கூடியனவாகத் தோன்றவில்லை. எனினும் பொதுவாகவும் சிறப்பாகவும் சிலசெய்திகளை இங்கே குறிப்பிடலாமென நினைக்கிறேன்

1. தங்கள் வினாக்கள் பொருளதிகார ஆராய்ச்சியில் இன்னின்ன முறையைக் கையாளவேண்டுமெனக் கற்பிக்கின்றன. ஆராய்ச்சித் துறையிலிருப்போர்க்கு இஃது உதவியாகக்கூடும்.

2. எல்லாச்செய்திகளும் நூலில் வெளிப்படையாகக் கூறியிருக்கவேண்டுமென்பது தங்கள் கருத்தெனக் கருதப்படுகிறது. ஒரு இலக்கண நூலில் அவ்வாறிருப்பது இயலுவதோ? என்ற ஐயப்பாடு எனக்குளது. இலேசு, புறனடை, உத்திகள், உரைவகைகள் என்பனவற்றை

யெல்லாம்கொண்டு கருதும்பொழுது, இலக்கணமென்பது மிக்க சுருக்கமாயும் பிரபல நூல்களின் ஆதாரங்களை வேண்டி நிற்பதாயும் இருக்குமென்று நினைக்கவேண்டியுளது. பிறநூல்களும் செய்யுட்களும் பின்புதோன்றிய வேனும் அவையும் முன்னை இலக்கணத்தின் கட்டளையைப் பெரும்பாலும் தழுவியனவாகத்தானே இருக்க வேண்டும்? இன்றேல் இலக்கணத்தின் பயன் யாதாகும்?

3. தொல்காப்பியர், வடசொல் தமிழில் வழங்குமாறு விதித்திருப்பதும், வழிநூல் வகையுள் மொழிபெயர்ப்பையும் சேர்த்திருப்பதும், பிறவும், ஓரோவழி அவர் வடமொழி அல்லது வடமொழியாளர் கொள்கையினையும் தழுவியிருப்பாரோ என எண்ணச்செய்கின்றன.

4. நூலாசிரியர் பெயர்க்கு நூலகத்தே மேற்கோள் இருக்கவேண்டுமென்பது ஒருதலையன்று. ஒப்புயர்வற்ற தமிழ் நூலாகிய திருக்குறளில் ஆசிரியர் பெயர் இல்லையே. தொல்காப்பியத்திலும் இல்லையே, சிறப்புப்பாயிரமும், தொன்று தொட்ட ஆட்சியுமே ஆசிரியர் பெயரைத் தெரிவிக்க உரியனவாகும்.

5. ஆசிரியர் பெயரிலிருந்து நூற்பெயருண்டாகும் என்பதற்கு அகத்தியம் முதலாகவுள்ள எண்ணிறந்த தமிழ் நூல்களும் வடநூல்கள் முதலியனவும்

சான்றாக ளாகின்றன.

6. 'ஒழுங்கற்றமணமுறைகளை நீக்கி. .....விதித்துப் போந்தனர்' என ஆராய்ச்சிக்காரர் கூறியது சிறிதும் பொருத்தமற்றதென்றும், கண்டிக்கத்தக்கதென்றும் நான் கூறுவது தவறாகாதென எண்ணுகின்றேன்.

7. 'அடியோர் பாங்கினும்' என்பது கொண்டு விற்றுக் கொள்ளற்குரிய அடிமைகளிருந்தனரென ஆராய்ச்சிக்காரர் கூறுவது பொருத்தமற்றதென்றே தோன்றுகிறது.

15

தங்களுடைய மற்றைய வினாக்களெல்லாம் எனக்கும் ஐயப்பாடு விளைப்பனவாயும், இனி ஆராய்ந்து தெளிய வேண்டுவனவாயுமுள்ளன. தாங்கள் அவைகளை விளக்கி விரிவுரை நிகழ்த்துங்கால் இன்னும் செவ்வையாக அறிந்து கொள்ளலாமென எண்ணுகின்றேன்,

இங்ஙனந் தங்களன்பன், (Sd.) மு. வேங்கடசாமி.

---

IV

திருச்சிராப்பள்ளி, 26—9—23.

அன்புமிக்க அண்ணல்,

தங்கள் கட்டுரை நேற்றே என் கைக்கெட்டியது.

சுவடியைப் பாராமலே, என் நினைவிலுள்ள வண்ணம் விடை பின் வருமாறு:—

| வினா எண். | விடை. |
|---|---|
| 1. | இல்லை, |
| 2. | ,, |
| 3. | ,, |
| 4. | ,, |
| 5. | ,, |
| 6. | ,, |

7. 'இன்பமும் பொருளுமறனு மென்றாங்கு'

(களவியல்)

"காமப்புணர்ச்சியும் இடந்தலைப்படலும்"

(செய்யுள்)

இவைபோல்வனவே ஆசிரியர் கூற்றாகும்.

8. "மேலோர் மூவர்க்கும்" "பொய்யும் வழுவும்"

என்பனவற்றிலிருந்து சிலர்
கருதக்கூடும்.

16

9. விளங்கவில்லை.
10. ,,
11. இல்லை.
12. விளங்கவில்லை.
13. ,,
14. "மறைவெளிப்படுதலுந் தமரிற் பெறுதலும்
,,

(செய்யுள்)

15. a. ஐவகை மக்களே.
    b. ஆம்.
    c. விளங்கவில்லை.
16. விளங்கவில்லை.
17. ,,
18. இல்லை.

19. குப்தவித்யை என்று சொல்லக் கேள்வி.

20. இல்லை. பொருளில் "காமஞ்சாலாவிளமை' கைக்கிளை எனவும், 'இளமை தீர்திறம்' பெருந்திணை யெனவும் தொல்காப்பியம் கூறுகின்றது.' கி. பி. 8-ம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதான களவியலுரை கூறுகின்றது.

21. இல்லை.

22. —

23. சூத்திரத்து இல்லை.

24. 'அறுவகைப்பட்ட' என்னும் சூத்திரம் முதலியவற்றாற் கருதவேண்டியதே. ஆரியர் தமிழர் என்பதற்கு வேறு விளக்கம் இல்லை. 25. இல்லை.

26. ,,

27. ,,

28. ,,



29. இல்லை.

30. 'உலகத்தாரது' என்பதில் உண்டாம் இழுக்குப் புலனாகவில்லை.

31. ஆராயவேண்டியது.

தங்கள்,

(Sd.) மு. வேங்கடசாமி.

---

## V

Waltair, 19—9—1923.

அன்புள்ள ஐயா,

தங்கள் 1923-9-3வது நாளைய தாள் கிடைத்தது.

இத்தெலுங்கு நாட்டில் தமிழ் எழுத ஆள் கிடைப்ப தருமையாதலின், ஆள் தேடிப்பிடித்து எழுதியனுப்பிய படி தவறிப்போகாதபடி

'ரெஜிஸ்தர்' செய்தனுப்பியதை யன்றி வேறு
பொருட்டில்லை.

9. திருவண்ணாமலையார் பழங்காலத்தைப்போல
என்னுடைய 'ஜடம்'களுக்கு ஆடிப்படை
தேடிப் புலப்படவில்லை என்றெழுதியிருக்கின்றீர்கள்.
வீண்பொழுது போக்கத் தங்களுக்கும் நேரங்
கிடைக்காதென்பது எனக்குத் தெரிவு. இங்கு
மவ்வாறே ஆகலின் மலக்கு சொற்களிற்
செலவிடாமல் என் வினாக்களுக்கு, எதிர்
வினாக்களையே செப்பாகத் தாங்கள்
வரைந்திருந்தீர்களாயினும், மறுமுறையாயினும்
தாங்கள் நேர் விடை யளிக்கும் வண்ணம் தங்கள்
வினாக்களுக்கு யான் நேர் விடைகளை கொடுக்
கின்றேன், தங்கள் கொடியைத் தாழ்த்தவாவது
என் கொடியை யுயர்த்தவாவது என்னுடைய
முயற்சி யன்றென்பதை முன்னதாகத்
தெரிவித்துக்கொள்ளுகிறேன்.
எம்முயற்சியாலாயினும் கூட்டல்
குறைத்தலின்றிப் பண் .

டைய
உண்மைகள் வெளியாகல்வேண்டுமென்பதே ஈனது
நோக்கம்.

3. என்னுடைய ஐய வினாக்களில் 'இல்லை' என்னும்
ஒரு சொல் விடையையே எதிர்நோக்கிய வினாக்கள் பல.
ஆயினும் அவ் 'இல்லை' என்கிற விடையை நானே ஏற்று
கொள்ளாமல், தங்களைக்கேட்டதின் பொருட்டேதெனின்,
பல்வேறு தொல்லைகளுட்பட்ட என் தமிழ்க் கல்வியிலும்,
தமிழிலேயே பிறந்து, தமிழிலேயே வளர்ந்து, தமிழ்த்
தொழிலிலேயே இருக்கும் தங்களுடைய தமிழ்க் கல்வி
விரிந்ததாகையாலும், 'உண்டு' என்று சொல்வதற்கு ஒரு
நூலில் ஓரிடத்திற்கண்டு சொல்லிவிடலாம், ஆனால் 'இல்லை'
என்று சொல்வதற்கு பல நூலும், பல்லிடமும், முற்று

முணர்ந்தோர்க்கன்றி இயலாதாகையாலும், அவ்
'இல்லை'
என்னும் விடையைத் தங்கள்பால்
நேடினேன். அவ்
'இல்லை' என்னும் விடையாற் பயனென்னை
என்றாணாக்
கூடும். அதனாற் பயன் சிறிதன்று.
சிலபோழ்து அவ்
'இல்லை' என்னும் தெளிவு பெரும் பயனைக்
கொடுத்து.
அதைத் துய்த்துள்ளேனாகலின், இப்போதும்
அத்தகைய
விடையைப் பல வினாக்களுக்குத்
தங்களிடமிருந்து எதிர் நோக்கினேன். 'இல்லை'
என்பதற்கு மாறாக உண்டு என்று
வரினும் அதனால் என் மறைப்பு நீங்குமாகலான்
அதனா
லும் நற்பயனை யன்றி வேறில்லை.

4. இதுபோன்ற பழைய
நிகழ்ச்சியொன்று யான்

இவண் குறிப்பிடலாகும் அதாவது, சார்பாய்தத்தின் இப்போதைய அடுப்புப்போன்ற மூன்று புள்ளி வடிவம் தவறென்றும், தொல்காப்பியம் தெரித்த ஆய்தமென்ற முப்பாற்புள்ளி, மூன்று பாகுபாட்டையுடைய ஒரு புள்ளியாய் இருத்தல் வேண்டுமென்றும், எனக்குத் தோன்றி, ஆய்தத்தின் பண்டைவடிவினைக்காண, கல்வெட்டு, செப்



பேட்டு வெட்டுப்படிகள், பதிப்பிற்கு வந்தன வாராதனவற்றுள் என்னால் கூடியவரையிற் றேடினேன். ஆனால் ஆய்தவடிவம் எங்கும் காணப்படவில்லை.

வெட்டெழுத்துக்களை ஆராய்வதே தங்கள் கல்வியும் தொழிலுமாகவுடைய எபிக்ராபிஸ்ட்கள் (Epi- graphists) போல யான் தீரத் தெரிந்தேனென்று நினைத்துக்கொள்வது புல்லறிவாண்மையாகுமாகையாலும், உண்மை புலப்படாது போய்விடுமாகையாலும், காலஞ்சென்ற திருவாளர் கோபிநாதராயர் அவர்களை ஆய்த வடிவம் எங்கேனுங் கண்டதுண்டாவென்றெழுதிக் கேட்டேன். அந்நாள் வரையிற் கண்டுணர்ந்த வெட்டெழுத்துக்கள் யாவினும் ஆய்த வடிவம்

காணப்படல் 'இல்லை' என்று அப்பெரியார் எழுதினார். அந்த 'இல்லை' | எனக்குப் பெரும் புதையல் கிடைத்த பலனை யீந்தது. கோபிநாதராயரவர்கள் முந்தாநாளைய வீரமாமுனிவர் துரைக்குப் பின் வந்த, அடுப்புப்போன்ற மூன்று புள்ளி வடிவையே பண்டைய ஆய்த வடிவமென்னும் அளவைத் தவறான எண்ணத்துடன் தேடினமையால், ஆய்த வடிவம்

காணப்படவில்லையென்று எழுதினார். பின் என் ஆராய்ச்சியில் அவர் பார்த்து இல்லை யென்ற கல்வெட்டுகளிலேயே ஆய்தம் வேறு வடிவுடன் இருக்கக் கிடைத்தது. அதன் ஆட்சி முறையும் கிடைத்துத் தொல்காப்பியம் சொன்ன பிறப்பியல், மக்கள் பேச்சுறுப்புக்களால் ஆக்கக்கூடிய எல்லா எழுத்துக்களுக்கும் பொதுவியலென்பது தெரிந்து, எம்மொழியையும் தமிழ் எழுத்துக்களால் எழுதுமுறை பல்லோர் பயின்று வருகின்றோம். ஆகலின் 'இல்லை' என்னும் தெளிவு பயனற்றதன்று.

5. தொல்காப்பிய உரையாசிரியர்கள் கைக்கொண்ட முறைப்படியே தாங்களும், ஆரிய வேத வேதாங்கங்

களைத் தழுவி ஆராய்ச்சி செய்திருக்கிறீர்களென்பது நன்கு தெளிந்ததே. அவ்வாறு ஆராய்ச்சி செய்பலாகா தென்று வற்புறுத்த யான் முன்னிடவில்லை. ஏனெனில் அவைகள் பயனற்றனவென்பது என் கருத்தல்ல. அவைகள் தொல்காப்பியத்தின் கொள்கைகளையே உணர்த்து கின்றன வென்று ஏற்றுக்கொள்வதற்கு அவை இடங் கொடாவிட்டாலும், அவ்வவ்வுரை, ஆராய்ச்சி எழுதிய காலத்தவர் கொள்கைகளையேனும் இன்னவென அளவைக்கிணங்க நிகழ்த்துகின்றன.

6. நூலிற்குப் புறம்பான பொருள்களை நூலிலேற் றிப் பொருள்கோடல் ஆர்க்கியாலாஜிகல் (Archaeological) முறையன்று. அவ்வாறு வேறு பொருள் புகுத் தாது பொருள் விளங்காத இடங்களில் 'பொருள் விளங்க வில்லை' என்கிற உண்மையையே உரைத்துச்செல்வது ஆர்க்

கியாலாஜிகல் முறை. அம்முறையில் ஒரு காலத்தனவாய பல நூல்களைக் கலந்து பொருளெடுப்பதுண்டு. ஆனால் ஒரு காலத்தனவென்பதனை முதற்கண் நிலைநாட்டல் இன்றியமையாதது. இங்க்லிஷ் (English) என்னும் பெயர் மாத்திரையில் ஒற்றுமைகொண்டு பழைய சாசர் (Chauser) இங்க்லீஷையும், இப்பொழுதைய இங்க்லீஷையும் ஒன்றாக உணரல் தகாததுபோல, "மறை", 'அந்தணர் மறை' போன்ற பெயரொற்றுமை கொண்டு, தொல்காப்பியத்துட் கூறிய மறையும் இப்போது நான் மறை என்னும் ஆரிய வேதமும் ஒன்றெனக் கொள்வதற்கு ஆர்க்கியாலாஜிகல் முறை இடங்கொடாது.

7. உரையாசிரியர்கள் எல்லோரும் சில நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்தவர்களே. ஆனால் தொல்காப்பிய நூல் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்பது தாங்களும் ஒப்பியது. ஆகலின் தொல்காப்பியக் கருத்தை



நேரில் உணர்ந்து உரையாசிரியர்கள்

எழுதினர்களென்ப

தற்கோ இல்லை. வரலாற்று வகையில்

தொல்காப்பியத்

தின் உண்மைப்பொருள் தலைமுறை தலைமுறையாக

வழு
வாது, செவிக்குப் பின் செவியாக வந்து, பின்
உரையாசிரியர்கள் செவிக்கும் வந்து,
தொல்காப்பியத்தின் உண்மைக்
கோட்பாடுகளையே எழுதினார்களென்று
கொள்வதற்கும்
இல்லை, தொல்காப்பியம், இறையனார்
அகப்பொருளினும் '
மிகவும் முந்திய நூல் என்பதை மறுப்பார் உளராக
எனக்
குப் புலப்படவில்லை. தொல்காப்பியம், இறையனார்
அகப்
பொருளிற்கு முன்பு பிறந்தும்,
அகப்பொருளைப்பற்றி
மிகவும் விரிவாகப் பேசியும், அழியாதிருந்தும்,
பொரு
ளிலக்கணம் தெரிந்தார் இலரெனப் புடைபடக்
கவன்று கவற்சிக்காகக் கடவுளே
இறையனாரகப்பொருளை இயற்
றிப் படியிடுக்கில் செருகினர், என்கிற ஒரு
கதை
பழைய எழுத்தில் காணப்படுதலால்,

தொல்காப்பியம்

நெடுங்காலம் மறந்தும், மறைந்தும் கிடந்ததென்பது

தோன்றுகிறது. அன்றேல் இறையனார் அகப்பொருள் போன்ற ஒரு குறுகிய நூல் அவ்வளவு பாராட்டப்படுவ தற்கிடமில்லை. எழுத்திற்கும் சொல்லிற்கும் சிறந்த தொல்

காப்பியம் இருப்பினும், ஓர் குற்றங் குடிகொண்ட குறுந் சுவடி, பலவாக்கினன்றால், எவ்வாறு கல்லூரிகளிற் போற் றப்படுகின்றதோ, தொல்காப்பியம் பொருட்செய்யப்ப டாமல் இப்போதும் போகின்றதோ, அவ்வாறே முற்கா

லத்திலும் சிறந்த தொல்காப்பியப் பொருளதிகாரம்

மறைந்து நெடுங்காலம் கிடந்திருந்ததென்பதை, இறைய னாரகப்பொருட் காலதயால் மாத்திரமன்று, பின்றோன் றிய பொருளிலக்கணங்களில் துறைமுறைகளும் மாறி நிற் பனவும் வெளியாக்குவன. ஆதலின் நெடுங்காலம் மறைந் திருந்த தொல்காப்பியத்திற்கு உரையாசிரியர்கள் காலத்

துப் புத்துயிர் கிளம்பி, சில ஆண்டுகளுக்குள் பலவுரைகள் எழுதலாயின. அவ்வாறாயின் அவர்கள் தங்கள் காலத்துக்கிடைத்த இலக்கியங்களைக்கொண்டும், வழக்கத்திலிருந்த தங்கள் கோட்பாடுகளைக்கொண்டும், உத்தி வகையால் நூலிற்கு அளவைப்படி சான்றாகாத பல பொருள்களை ஏற்றி உரை எழுதியிருப்பது, அவ்வுரைகளைத் தொட்ட தொட்ட இடந்தோறும் தோன்றுகின்றது.

8. தொல்காப்பியத்துட் சொன்ன 'மறை' ஆரிய மறைகள்தானென்ன ஒப்பினுங்கூட, உரையாசிரியர்கள் கொள்கைப்படி, வியாசர் ஆரிய வேதங்களைச் சிக்கசுற்றித் தொகுப்பதற்கு நெடுங்காலத்திற்கு முன்னரே தொல்காப்பியம் இயற்றலான தென்றலின், வியாசருக்குச் சில ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்வந்த உரையாசிரியர் காலத்து வழங்கிய, இப்போது வழங்குகிற, வுட்ராப் துரையோ, மாக்ஸ்முல்லரோ பதிப்பித்த நான்கு வேதங்களல்லவென்பது உரையாசிரியர்

கூற்றுலேயே வெளிப் படை, வியாசருக்கு
முந்திய ஆரிய வேதமும், அவருக் குப்பிந்திய ஆரிய
வேதமும் ஒன் றற்கொன் று படியாயின்,
வேதவியாசர் என்னும் பெரும்பெயர் பெற்றோர்
புராட் டியதுதான் என்னை? வியாசருக்கு முந்திய
தொல்காப்

பியத்தில், வியாசருக்குப் பிந்தியதும் அவரால்
திருத்தப்

பட்டதுமான ஆரிய வேதங்களினின்று
உய்த்துப்பொருள்

கோடல் ஆர்க்கியாலாஜிகல் முறைக்கு ஒவ்வாது. தொல்
காப்பியத்திற் சொன்ன மறை இத்தகையதென்பது தெரி
வதற்கு, நூலாகவாவது, சுருதியாகவாவது இப்போதில்லை
யாதலின், 'பொருள் விளங்கவில்லை' யென்று உண்மையை
உரைத்துச் செல்வது ஆர்க்கியாலாஜிகல் முறை [10. (b) ]

9. "அந்தணர் மறை" யைத் தழுவியே தொல்காப்பி
யம் எழுதப்பட்டிருக்கின்றதென்பதும், தொல்காப்பியத்

துட் காணுதது அந்த "அந்தணர் மறை" யிற் காணலாகும்படியும், அவ் அந்தணர் மறையிற் காணுதவை இத் தொல்காப்பியத்திற் காணலாகும்படியுமே தொல்காப்பியம் அமைந்திருக்கிறதென்பது என்னுடைய நம்பிக்கை.

[ 10. (a) ] ஆனல் அந்த அந்தணர் யாவர்? அவர் மறை யாது? என்பவைதான் புலப்படாதவற்றுட் சில. வடவேங்கடந் தென் குமரியாயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து அந்தணர் என்பாரும், சிந்து நாட்டுப் பிராமணர் என்பாரும் ஒன்றேயா? தமிழ் நாட்டு அந்தணர் மறையும், சிந்து நாட்டுப் பிராமணர் வேதமும் ஒன்றேயா? நான் மறை, சதுர்வேதம்; அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்; பிரம, க்ஷத்திய, வைஸ்ய, சூத்திர என்னும் போலியொற்றுமை மாத்திரங்கொண்டு இரண்டும் ஒன்றென்பதா? உட்கிடை வேற்றுமை கண்டு அன்றென்பதா?

10 தொல்காப்பியஞ் சொன்ன தமிழகத்து அந்தணர் மறை, வியாசருக்குப் பிந்திய ஆர்ய வேதமன்றென்பதற்குச் சான்று தொல்காப்பிய நூலிலேயே பல்லிடங்களிற் காணலாம். சிற்சிலவே இம்முடங்களில் குறிக்க வியலும்.

தமிழகத்தந்தணர் மறையோ, தெய்வம் அஃறிணை யென்பது; மந்திரங்கள் மாந்தர் கிளந்தவை என்பது; அம்மந்திரங்களுக்கு ரிக்குகள் போன்ற அளவு முதலாகிய கடட்பாடில வென்பது; கொடிநிலை கந்தழி வள்ளியென்ற வடுநீங்கு சிறப்பின் மூன்றும் முதலன வென்பது; மூ ற ன எ ஒவ்வுமன்றி ஆய்தம் முதலிய முச்சார்பு வகை தொகையாகச் சாரவரும் எண்ணிறந்த எல்லா எழுத்துக்களுக்கும் அகத்தெழு வளியிசை அளவுநுவல்வது. இத்தகைய பல அடிப் படையான கொள்கைகளிலேயே இப்போதைய ஆரிய வேதத்தினின்றும் முற்றும் வேற்றுமைப்பட்டிருப்பது காணலாம். ஆகலின் தங்கள் (10–b) வினா ஆரியவேத

மன்றேல் வேறியா தென்றதற்குத் —தெரியாது என்கிற வெள்ளையாய விடைதான் யான்கொடுக்க வியலும். புல் லறிவாண்மையிலும், தெரியாத பேதைமையே நன்கு சிற ந்த தன்றோ?

11. வடசொல், ஆரியம், சம்ஸ்க்ருதம் என்பன ஒரு பொருட் கிளவிகளாக அணித்தில் வழங்கி வருவது அறிவேன். அவ்வாறே தாங்களும் 7—8—வினாக்களில் ஆண்டிருக்கின்றீர்கள். ஆனால், தொல்காப்பிய காலத் தில் 'வடசொல்' தவிர மற்ற இரண்டு சொற்களும் உலகில் எங்கேனும் இருந்தனவா? இருப்பின் தமிழ் கூறு நல்லுலகத்தில் வழங்கினவா? வழங்கின் மூன்று சொற் களும் ஒருபொருளனவாக வழங்கினவா? என்பன இனி யும் ஆராய்ந்து தெளிதற்குரியன.

தமிழில் வழங்கிய சொல் வகைகள் நான்கினுள் இயற் சொல் முதன்மையாயது; வடசொல் கடைப்படியினான் அது. வடசொல் என்பது தமிழ்க்குரிய சொல்லின் று நேராகவே பொருள்கொள்ள இடங்கொடுப்பது. உய்த் துப்பொருள் கோடல் வேண்டாதது.

அத்தகைய 'வடசொல்' என்னும் தமிழ்ச்சொல்தான் என்னை? என்கிற ஆராய்ச்சிக்குத் தொல்காப்பியத்து ணின்றே ஆரியச்சொல்தான் அல்லது
னென்று தெளிவிக்கக் கூடிய கூற்று
சம்ஸ்க்ருதந்தா
எனக்கெட்டிய

வரையில் கிடைக்கவில்லை

'வடசொல்' என்பதை வடக்குத் திசையிலிருந்து வந்த சொல், என்று பொருள் கோடல் எளிதாயினும் ஆராய்ச்சிக்கண் நோக்கின், வடசொல் என்பது திசைச் சொல் என்பதனுள் ஒரு பகுதியாக அடங்கும். அவ்வாறாக, திசைச்சொல் என்பதையும் சொல்லி, வடசொல் என்பதனையும் சொல்ல வேண்டிய பொருட்டு விளங்க



வில்லை. வடசொல் என்பதைத் திசைப்பொருளில் வழங்கியிருத்தல் பொருந்தாததாகத் தோன்றுகிறது. தொல்காப்பிய காலத்தில் 'வடக்கு' என்னும் சொல்லை எவ்வெப் பொருளில் வழங்கியதென்பது காட்ட நமக்கு நிகண்டு மில்லை, அகராதியுமில்லை.

வடக்கிருத்தல் என்னுஞ் சொற்றொடரொன்று பிற்றை நூல்களிற் காணப்படுகின்றது. அத்தொடரிலே

கடமையென்பது என் கருத்து.
வியே வருகின்றேன். (7ம் 8ம்).
ஆங்வாறு யானும் தமிழ

13. 'ஆர்ய' என்னுஞ் சொல் தொல்காப்பிய காலத்திற்குப் பின்னும் திவாகரத்திற்கு முன்னும் வந்து நுழைந்திருத்தல் கூடும். அப்போது அதற்கு மிலேச்சன் என்னும் பொருள் இருந்ததும் நமக்குத் தெரியுமல்லவா? இன்னும் பிற்காலத்தில் 'ஆர்ய' என்பது மிலேச்சன் என்னும் பொருளை யிழந்து, ஆசான் என்னும் பொருளில் வந்ததும் தெரிந்ததே. ஆதலால் ஆர்யன் ஆசானென்று சில நூற்றாண்டுகளின்முன் அந்த ஆர்யன தமிழர்களுக்கு நெறி கற்பிக்கக்கூடுமேயன்றி, ஆர்யன் மிலேச்சனாயிருந்த காலத்தும், ஆர்யன் என்பானே உண்டாயிராத தொல்காப்பிய காலத்தும், அதன் முற்காலத்தும், மூக்கானைய ஆர்யன் போய், வியாசருக்குப் பிந்திய ஆர்ய வேதத்தை வைத்துக்கொண்டு, பண்டைத் தமிழர்களுக்கு நெறி கற்பித்தானென்பது ஆர்க்கியாலாஜிகல் ஆராய்ச்சிக்கும் பொருந்தாது. அவையல் கிளவிகள் அடுக்கடுக்காய்க் கிடக்கும் வேதவேதாங்கங்கள், காவியங்கள், வ்யாகரணங்

களையுடைய பிற்கால சிந்து நாட்டு ஆர்யன், முற்பட்ட தொல்காப்பிய காலத் தமிழருக்கு நெறி கற்பித்திருப்பானேல், அவையல் கிளவிகளுக்கு மறுப்பு தொல்காப்பியத்

திற் றோன்றியிராது. ஆர்யன் ஆசாறுை சில நூற்றாண்டுகளில், அவன் நெறியைக் கடைப்பிடித்து தமிழரும் அவையல் கிளவிகளைப் பேச்சிலும் எழுத்திலும் வழங்கிவருவது வெட்டவெளியாகத் தெரிந்ததன்றோ ? ஆயினும் அவையல் கிளவிகளை மாத்திரம் ஆர்ய மொழியில்தான் வழங்குவார்கள். தங்கள் மொழியில் வழங்கார்கள். தமிழகத்து 'ஐயர்' வடநாடு சென்று 'ஆர்யர்' ஆயினரென்பதும் தமிழின் கூறுகிய வடசொல், நன்றாகச் செய்யப்பட்டதா

...

தக்கொண்டு சம்ஸ்க்ருத மொழியாயதென்பதும் என்னு

டைய கொள்கை. இதனை 1917 ஆம் ஆண்டில் ஒரு சிறு சுவடியிற் சொல்லியுள்ளேன். இடை ஆசியாவிலிருந்து ஆர்யர் வந்ததாகக்கொள்வது தவறென்றும் விளக்கியுள்ளேன். பின் திருநெல்வேலியில் சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார் வெளியிடும், 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் டுதிங்கள்தாளில், தமிழகம் என்னும் தலைப்போடும்,

ஜஸ்டிஸ் (Justice) புதினத்தாளில் நிகழுந் திங்கள் 5, 6 நாட் பதிப்புகளிலும் இது பொருளைப்பற்றிய பெருஞ் சொற்கள் வெளிவந்துள்ளன. 1920 ஆம் ஆண்டில் கல்கத்தா ஆசிரியர் ஏ. சி. டாஸ் (Das) என்பாரும் இண்டியாவிலிருந்து ஆர்யர் வந்தார்களென்பது தவறென்று காட்டி ஒரு நூல் வெளியிட்டுள்ளார்.

14. தொல்காப்பியத்தின் உண்மைப் பொருளறிவதற்கு, அதற்கு முன் பட்டனவும், ஒத்தகாலத்தனவுமாய சான்றுகள்தான் தேடுகின்றேன். பிற்காலத்துச் சான்றுகள் ஐயமறப் பொருள் கோடற்குத் துணையாகா. பிற்காலத்து இலக்கண இலக்கியங்களில், துறைமுறைகளும் வேறுபட்டன வென்பதும் தாங்களே ஒப்பியுள்ளீர்கள். எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் மாறுபட்டிருப்பதும் வெளிப்படை. தொல்காப்பியத்திற் காணும் சில சொற்கள், திவாகரம் நிகண்டுகளிலும் காணப்படவில்லை. ஈ, தா, கொடு என்பன போன்ற பல சொற்களுக்கு பொருள் வேற்றுமை தொல்காப்பியம் திட்பமாகக் காட்டுவதுபோல திவாகரம் நிகண்டுகள் காட்டவில்லை. பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, திவாகரம், நிகண்டு முதலான பிற்கால நூல்களை அளந்தறிவதற்குத் தொல்காப்பியத்தை அளவு கருவியாகக் கோடல் அமையுமேயன்றி, தொல் காப்பியத்தை

பயன் தாரா. பயனின்றேனும் குற்றமில்லை. தவறு வழி களிற் செலுத்திவிடவும் கூடுவனவாக இருத்தலின், தொல்காப்பியத்தின் ஒத்தகாலத்தனவும் முற்பட்டன வுமாய சான்றுகள் யான் தேடினேன். ஆனல் கிடைக்க வில்லை. என் சிற்றளவு தமிழ்க்கல்வியிற்றேடிக் கிடைக்' காது போயினும், தங்கள் பேரளவு கல்வியில் அத்தகைய சான்றுகள் கண்டறிந்திருந்தால் அதன் பலனை யானும் எளிதில் அடையலாமென்றே யான் தங்களை வினவியது. 'போகத்தியத்திரட்' டென்று ஒன்று வெளியாயது. அந் தத் திரட்டு முந்தாநாளைய தமிழ் மணத்தோடிருக்கின்றது.

'செங்கோன்றரைச் செலவு' என ஒரு சிறு சுவடி வந்தது. அது பழந் தமிழ் மணங் கமழுகின்றது. ஆயினும் புதுத் தமிழர் பழந் தமிழ் போன்று ஆக்கினரோ என்னும் ஐயம்

இன்னும் ஆருவித் தெளியவேண்டியதாகவிருக்கின்றது. இன்னும் புறநானூறு முதலிய நூல்களில் சில செய்யுட்கள் இடைச்சங்க காலத்தனவென நினைத்தற் கேற்ற மொழியமைதியும் பொருளமைதியும் பெற்றுள்ளன. ஆனால் தீர்மானமாக இடைச்சங்க காலத்தவைதான் என்று சொல்லுவதற் கிடமில்லாதிருக்கின்றது. தங்களுக்குத் தெரிந்த அளவிலும் தொல்காப்பியத்திற்கு ஒத்த காலத் தனவும் முற்காலத்தனவுமாய சான்றுகள் கிடையாவேல், இன்னும் சான்று தேடும் தொல்லையை ஒழித்து, தொல்

காப்பியத்திற்கு நீண்ட காலத்திற்குப் பிற்பட்ட பாதேசக் கொள்கையர்கள் இட்ட பழைய புதிய உறைகளைக்கழற்றி வைத்துவிட்டு, தொல்காப்பியமே! நீயே துணை! என்று

அதன் சூத்திரங்களையே ஆய்ந்தாய்ந்து பொருள் கிடைத்த மட்டில் கிடைத்ததென்று கொள்வது, கிடைக்ாதவற்றைத் 'தெரியவில்லை' என்று கரவடமின்றிச் சொல்லி விடுவதே என்னுடைய நோக்கம். (1, 5, 6).

15. "நான்கு வேதம், வருணபேதம் போன்ற பொது அம்சங்களில் முன்னோர்களுக்கு அபிப்பிராய பேதம் உண்டா" என்கிற வினாவில், "முன்னோர்" என்றது உரையாசிரியர்களைச் சுட்டுகின்றதெனக்கொள்ளுகிறேன். அவ்வாறுகொண்டது சரியானால், எனக்குத் தெரிந்த அளவில் அவர்களுக்குள் முரண்பாடில்லை, தாங்களும் அவர்கள் போக்கைவிட்டுப் புறம்பாகவில்லை. என் வினாக்களிலும், அவர்களுள்ளும், தங்கள் ஆராய்ச்சியிலும் முரண்பட்டதாக எங்கும் குறிப்பிடவில்லை. ஆகையால் என்னைப் பிரமாணம் கேட்கவேண்டிய பொருட்டு இன்னதெனத் தோன்றவில்லை.

என்னுடைய வினாக்கள் அம்முன்னோர்கள் கோட்பாடுகளுக்கு முரணுவதுண்மை. அதற்கு, யான் அளவை நூற்படியும், ஆர்க்கியாலாஜிகல் முறைப்படியும், ஆராயப்புகுந்ததுவே பொருட்டன்றி வேறில்லை.

16. சூத்திரவுருவில் சுருக்கமாக எழுதிய நூலாசிரியர், உரைநடைபோல விரித்துக்

கூறவில்லை யென்று யான் அவர்பேரில் குற்றங் கூறவில்லை. அவர் சுருக்கக் கூறினும் பெரும்பாலும் விளங்கவே கூறியிருக்கின்றனர். சுருங்க இருக்கும் இளப்பங்கண்டு தங்கள் கோட்பாடுகளை நூலிலேற்றி நூலாசிரியர் விளங்கச் சொன்னவைகளை உரையாசிரியர்கள் மழுங்கச் செய்தனர்களே யென்று தான் வருந்தி அசாவேரி பாடுவதொழிய வேறில்லை. தாங்களும் அத்தகைய குற்றங்களை முன்னோரய உரையாசிரியர்களிடத்துக்கண்டு தங்களாராய்ச்சியி லெழுதியிருக்கின்றீர்கள். ஆனால் ஆர்ய வேத வேதாங்க வர்ணபேத யாக சம்பரங்களாதிய கோட்பாடுகளை நூலிலேற்றி முன்னோர் மொழிக்குமட்டில் தாங்களும் ஒப்பியிருக்கின்றீர்களென்று தங்கள் செப்பு வினுக்கள் உணர்த்துகின்றன. யான் தமி

மூன் என்கிற நினைவும் இன்றி, யான் ஆரியன் என்கிற கனவுமின்றிய அராபியனோ, சீனனோ மற்று வேறு புலத் தவனெவனோ ஒருவன், தமிழ் கற்று தொல்காப்பியத் திற்குப் பொருள் விரிக்கின் சாய்வின்றிய பொருளாகக் கிடைத்தல் கூடும்; அந்நாள் எந்நாளோ வென்றே இடர்ப் படுகின்றேன்.

ஆங்கிலத்தில் 'மூன்று வெண்காக்கைகள்' காதை போலச் சில ஆயிரம் ஆண்டுகளாகச் சொல்லக்கேட்டுச் சொல்லக்கேட்டு நமக்கெட்டிய விவரங்கள், அகத்தியர் கடலைக் குடித்தல், அகப்பொருளைக் கடவுளே எழுதி படியிடுக்கில் நழுங்கிவைத்தல், குதிரை மாளக்கொண்டு போதல், சங்கப் பலகை தானே விரிதல், தானே சுருங்கி இருந்த இடம் தெரியாமற்போதல் முதலாய இயற்கையில் நிகழாதவைகளும் உட்படுத்தி வருதலால், அவைகளை ஆர்க்கியாலாஜிகல் முறையில் அவ்வாறே ஏற்றுக்கொள்ள வேலாதிருக்கின்றது. இக்கேள்வியில் வந்த பழங்காதைகளில் எப்பகுதிகளைத் தள்ளுவது, எப்பகுதிகளையேற்றுக் கொள்வதென்பது அவரவர் உள்ளப் போக்கைச் சார்ந்ததாக விருக்கின்றமேதே பொதிய, தீர்மானமாக இதுதான் கொள்ளக்கடவதென்று சொல்ல ஒப்புதல் கிடைப்பதரிது.

ஆகலின் யான், நூலின் உட்கிடையான எடுத்துக்காட்டு-
கள் கிடைப்பின், மறுக்கவொண்ணாத சான்றுகளாகுமென்று
வினவியதை யன்றி, நூலாசிரியர் தன்
பெயரையும் பிற
வரலாறுகளையும் ஏன் நூலில் எழுதிவைக்கவில்லை
யென்று

குற்றங் காணவில்லை. ஆரிய நூல்களைப் படித்தால் ஆக்கி-
யோன் பெயரை ஆக்கியோனே நூலிற் சொல்லிச் செல்-
வதுபோல எழுதியிருப்பது பல நூல்களிலும் காணலாம்.
வால்மீகி ராமாயணத்தில், வால்மீகி சொல்லுகிறார், அவர்
இப்பேர்ப்பட்டவர் அப்பேர்ப்பட்டவர் என்று பாயிரமாக

31

இல்லாமல், நூலின் பகுதியாகவுள்ளதிலேயே
காணலாகும். அவ்வாறே பகவத்கீதையிலும், பல
ஸ்மிருதிகளிலும், உபநிஷத்துக்களிலும், இன்னும்
பல நூல்களிலும் இருக்கக் காண்கின்றோம். இது
ஆரியமுறை. தமிழ் ஆசிரியர்களோ,

தங்கள் பெயரிற் பெருமை பாராட்டாது, தங்கள் பெய-
ரையும் சொல்லாது போயினோர் பலர். திருவள்ளுவர்
என்பார் இயற்பெயர் முருகன் வள்ளுவனு, சாத்தன் வள்,

று வது, மற்றைப் பெயருடை வள்ளுவனென இன்னுந் தெரிந்திலது. கம்பன் என்பார், கம்பங் கொல்லையைக் காத்தவரா, கம்பேந்தி மாடு மேய்த்தவரா, அவர் இயற்

பெயரென்ன வென்பது இன்னுந் தெரிந்திலது.
வெள்ளி வீதியாரென்பார், மதுரையில்
வெள்ளிவீதியில் வதிந்த

தனால் வெள்ளிவீதியாரெனப் பெயர் பெற்றனரா? அவர்

இயற்பெயர் இன்னதென்பது விளங்கவில்லை. இவ்வாறு இன்னும் பல எடுத்துக்காட்டலாம்.
இதனால் தமிழாசிரியர்கள் தற்புகழ் துறந்தோரென்பதும், இவர்கள் உள்ளப் போக்கிற்கும் ஆரிய ஆசிரியர்கள் உள்ளப் போக்கிற்கும் எதிர் முகத்தில் எட்டாத தொலை யென்பதும், ஒருவாறு

தோன்றும். தொல்காப்பிய நூலாசிரியர் ஆரியப் போக்கின ராயின் பெரும்பாலும் அவர் நூலிலே தன்பெயரைப் பொறித்திருப்பர். அன்றேல் அவர் தமிழ்ப் போக்கின ரென்று சோடற்பட்டுண்டு. அதனுமே அத்தகைய விவ ரங்கள் நூலினுள்ளே உண்டோ என வினவினேன். (2, 3).

17. ஒரு வகுப்பினராயமக்கள் பிறிதோர் வகுப்பினர் நாட்டிற் குடியேறியவிடத்து, அவ்விருவருடைய வழக்குகளும், நடையுடை யொழுக்குகளும் அவர்களுட் கலந்து போவதும் கூடும்; காலக் கழிவில் தம் பண்டை மொழியைக் கைவிடுவதுங்கூடும்; அவ்வாறு கூடாமலுமிருக்கும்; அவ் விருசார் மக்களையும் வேறுவேறினத்தவராகக் கொள்ளவேண்டியிருந்தாலுமிருக்கும்; இரண்டுங் கலந்த புது இனத்தாராகக் கொள்ளவேண்டியிருந்தாலுமிருக்கும். ஆகலின், தங்கள் வீறு (9) பொதுமையான ஒரே வினைக்கு இடங்கொடுப்பதல்ல. அதன் மேலும் ஒரே வகுப்பினர் பிற்காலத்துப் பிறிது பிறிது கோட்பாடுகளைக் கடைப்பிடிக்க வேறு வேறு இனத்தினராக ஆகலாமாயின்

பாராட்டிக்கொள்ளுவதும் உண்டு. ஆகலின், இவைகளை ஆய்ந்தறிதற்கு, எத்னாலஜி என்கிற வடிவு வேற்றுமை கொண்டு உணரும் முறை தான் பெரும்பாலும் உதவியாவது. தருக்கிய பாட்டிக் கதைகள் ஒரு பயனுந்தரா. எடுத்துக்காட்டுவேண்டின்:—

ரோமானியரும் பல்வேறு நாட்டு ஸ்லேவ்சுகளும் வேறு வேறினங்களாக முற்காலத்திருந்தவர்கள், இப்போதைய இத்தாலியரென்கிற ஒரு பகுதியைத் தனியினமாகியோ ரிருக்கின்றனர். எத்னாலஜிப்படி பழைய வடிவுவேற்றுமைகள் இப்போது கிடையா.

ஆங்கிலோ சாக்சன்களும், நார்மன்களும், டேன்ஸ்களும், கெல்ட்களும் இன்னும் பல இனத்தினரும் ஒன்று கலந்து இப்போதைய இங்கிலிஷ்காரர்களாக இருக்கின்றனர். எத்னாலஜிப்படி பழைய வடிவு வேற்றுமைகள் இப்போது கிடையா.

பாரசீகர்கள் சில நூற்றாண்டுகளுக்கு முன் இந்தியா விற்குடிபுகுந்து, இந்தியர்களுக்கும் தங்களுக்கும் இருந்த வேறுவேறுருவங்கள் காலகடையில் சிறிது சிறிதாகக் குறைந்து, இப்போது இந்தியர்களுக்கும் பாரசீகர்களுக் கும் வடிவு வேற்றுமை எளிதிற் காணலாகா திருக்கின்றனர். அவர்கள் எண்ணிக்கையும் விரைவிற் சுருங்கி வருவதால் சில ஆண்டுகளில் அவர்கள் வேறினத்தாரென்னும் பெய ரும் அற்றுவிடக்கூடிய நிலையிலிருக்கின்றனர்.

33

இதுவரையில் பல இனத்தவர் ஒரினத்தவராகுவ தற்கு எடுத்துக்காட்டுகள் சொன்னேன். ஒரு இனத்த வர் வேறுவேறு இனத்தவராகப் பெருமை பாராட்டுவ தும் உண்டென்பதற்குப் பின் வருவன சான்றாகும்.

பழைய பச்சைத் தமிழர், திப்பு சுல்தானால் புது மஹம்மதியராய், மோவாய் மயிர் வளர்த்து, அரேபியாவி லிருந்து நேராக இழிந்து வந்த வேறினத்தவர் என்று இப்போது சொல்கின்றனர். பழைய மலையாளிகள் புதிய மாப்பிள்ளை மஹம்மதியராய் அவ்வாறே சொல்கின்றனர். அவர்கள் இல்லத்தும் இந்துஸ்தானி மொழியை வழங்க

முயன்று வருகின்றனர். தமிழர்களையும் அவர்களையும் ஒரு வகையாகச் சிரைத்து, ஒரு வகையாக உடையுடுத்தி, நிற்கச் செய்தால், பழந்தமிழர் வடிவை அவருள்ளும் காணலாம்.

அவ்வாறே சாதிச் சழக்கொழித்த ராமாநுஜப் பெரியோரால் வைஷ்ணவக்குறியிடப்பெற்ற பழந்தமிழர் பலர் ஆரிய வகுப்பினரென்று இப்போது சொல்லிக் கொள்ளுகின்றனர். இவர்களையும் ஒரு வகையாகச் சிரைத்து ஒரு வகையாக உடுத்திப்பார்த்தால், வேறினத்தவர்களென்று காண வேலாமை தெள்ளிதிற் புலப்படும்.

பல் நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்து ஓரிடத்துக் கலந்து வாழ்ந்த வேறுவேறு வடிவுடன் வந்த வேறுவேறினத்தினர், சட்டப்படி வதுவையில்லாமலும்கூட நாளடைவில் உயர்நிலையாலும், பணத்தாலும், உரத்தாலும், அழகாலும் இழுக்கப்பட்டு, நெய்த்தோரின் கலவையேற்பட்டு, ஒரு வடிவினராய்விட்டிருக்கின்றனரென்பது எத்னாலஜி தெளிவாகக் காட்டுகின்றது. அணித்திற் கலந்தவர்கள் இன்னும் சிறிது வடிவுவேற்றுமை மீதி வைத்திருக்கின்றனர். ஆகலின் ஒவ்வொரு கூட்டத்தாரையும் எத்னாலஜி

படித் தனித்தனியாக ஆய்ந்து பார்த்தே தோற்றினக் குறிப்பு அனுவேனு மிருக்கின்றதா வென்றறிதல் வேண்டியிருக்கின்றது. பொதுப்பட, கூடும், கூடாதென ஒரு சொல் விடையிறுக்க வேலாமலிருக்கின்றது. (9).

18. என்னுடைய 31 ஐயவினுக்களுக்கும், பேரளவு தமிழ்க்கல்விவாய்ந்த தாங்கள், எதிர்முகபாயல்லாது நேர் விடைகளாக ஈயும்படி வற்புறுத்தும் உரிமை பெறவே

தங்கள் விஞக்களுக்கு எதிர்விஞ யானும் கடாவாமல், எனக்குத் தோன்றிய நேர்விடைகளே எழுதியிருக்கிறேன்.

எட்டு மிரண்டும் பத்தாகுமா?
எட்டு மிரண்டும் ஒன்றாகுமா?

என்னும் விஞக்கள் கிருக்கன் விஞக்கள் போன்றிருப்பினும், அவைகளுக்கு அடிப்படை தேடியும் கிடைக்காது போயினும், ஆகும் ஆகாதென விடையீதலுக்குத் தடை யென்னென்று தோன்றவில்லை.

அளிசெய்து என் ஐய விஞக்களுக்கு நேர்விடை யீவீர்களென வேண்டுகின்றேன்.

இப்படிக்குத் தங்களன்பிற்குரிய,

(Sd.) பா. வே. மாணிக்கம்.

---

VI.

Teppakulam Post,
Trichinopoly

4—1—1924. அன்புள்ள ஐயா,

தங்கள் பொருளதிகார ஆராய்ச்சியைக் குறித்து யான் சென்ற செப்டம்பரில் தங்கட்கு எழுதிய தாளிற்கு இதுவரைத் தங்கள் மறுமொழி கிடைக்கவில்லை. அணித் 35 தில் திரிசிரபுரத்திற் கூடவிருக்கும் தமிழ்ப்பண்டிதர் மூன்றாவது பெருங்குழுவிற் பண்டை நூலாராய்ச்சிகளைப் பற்றி யுசாவத் தீர்மானித்திருப்பதனால், தங்கள் விடை விரைவிற் கிடைத்தலை வேண்டுகிறேன். உறையிடம் மேற் கண்டபடி.

இப்படிக்குத் தங்களன்பிற்குரிய,

(Sd.) P. V. Manickam.

## திரு. மு. இராகவையங்காரவர்களுக்கு.

---

## VII

திருவல்லிக்கேணி,
4, பேயாழ்வார்கோயில் வீதி,
9—1—24.

அன்புள்ள ஐயா,

தங்கள் கடிதங்கள் கிடைத்தன. தங்கள் வினாக்கட்கெல்லாம் விடைகள் தக்கவாறு விரித்தெழுதும் எண்ணம் எனக்கு நிரம்பவுண்டு. சிலகாலமாக சேர்ந்துள்ள வேலை மிகுதியாலும் அவகாசக் குறைவாலும் அதனை முற்றுவிக்கக் கூடவில்லை, இப்பொழுது சிலநாள்களாக எனக்கு உடம்பு குணமில்லை, அதனால், தாங்கள் விரும்புமாறு என் விடைப்பத்திரத்தை விரைய எழுதியனுப்பக்கூடாத  வனாயிருக்கிறேன் ஆயினும், என் விடைகளுக்காகத் தாங்கள் காத்திராமல் தங்கள் கருத்துக்களையெல்லாம் கழகத்தில் வெளியிடுவீர்களாக. பின்னர், என் கருத்துக்களை, அவசியமானால், உரியவாறு வெளிப்படுத்துகிறேன். காலத்தில் தங்கட்கு

கின்றேன்.

விடைதரக்கூடாமல் நேர்ந்ததற்கு விசனிக்

இங்ஙனம் தங்கள்,

[illegible] இராகவையங்கார்,

36

VIII

*2nd April, 1924.*

அன்புள்ள ஐயா,

தங்கள் 9—1—24 தேதிய தாள் கிடைத்தது. யான்

இரண்டாண்டுகளாகத் தெலுங்குநாட்டில் வேலையாண்மையை யுஞற்றிவர நேர்ந்ததனால், தமிழ்ப்புலவர் பெருங்குழூஉத் திருச்சிராப்பள்ளியிற் கூட்டிவைக்க வேலாமலே காலங்கழிந்து வருகின்றது. சென்ற மார்கழித் திங்களில் விடுதிபெற்றுச்சென்று முயன்றாம், முயற்சி முற்றுதற்குக் காலம் போதவில்லை. இன்னும் அக்குழூஉக் கூட லெந்நாளாகுமெனத் துணிதற்கும் ஏதொன்றுமில்லை. இதுவரைத் தங்கள் நிலக்கந்தீர்ந்து உடற்செழுமையுற்றிருப்பீர்களென வெண்ணுகின்றேன்.

ஆகலின், என் வினாக்கட்கெல்லாம் விடைகள் தக்க வாறு விரித்தெழுதத் தாங்கள் எண்ணியவாறே எழுதி யனுப்பும்படி மிகவும் வேண்டுகின்றேன்.

பண்டைத் தமிழ்மொழிச் செல்வியையும், தமிழகத் தோர் வள்ளையும், சிறக்கப் பரக்கச் சிதைவின்றிக் காட்டக் கிடைத்த வழியாப் பெருந்திடரித் தொல்காப்பிய மொ ல் றேயாகலின் தங்களை யிவ்வளவு வற்புறுத்தத் துணிந்தேன். இதற்கு மன்னிப்பீர்களாக.

தங்களன்பிற்குரிய,

P. V. Manickam.

திரு. மு. இராகவையங்காரவர்களுக்கு.

திருவாளர் பா. வே. மாணிக்கம் நாயக்கர் அவர்கள் (B.E., M. C. I., M. I. E.)

எழுதிய நூல்கள்.

---

1. The Tamil Alphabet, Its Mystic Aspect (with chart.) 1—8—0
2. தமிழலகைத்தொடர்; முதற்சுவடி, தொல்காப்பியவாராய்ச்சி 0—8—0
3. தமிழலகைத்தொடர்; இரண்டாம் சுவடி, தொல்காப்பியவாராய்ச்சி (அச்சில்)
4. அஞ்ஞானம் ~~(அச்சில்)~~ 0—8
5. Betwixt Ourselves in the Madras Zoo. ~~(அச்சில்)~~ 1—

இவை கிடைக்கும் இடம்:

S. Munisamy Mudaliar

~~P. C. முருகேசமுதலியார்~~,

"முருகன் தமிழகம்"

ஆண்டார் தெரு, திருச்சிராப்பள்ளி.